# மணலும் நுரையும்

கலீல் ஜிப்ரான்

தமிழில்
டாக்டர் ரமணி





கவிதா வெளியீடு

கலீல் ஜிப்ரான்

# மணலும் நுரையும்





மணலுக்கும் நுரைக்குமிடையே
இந்தக் கடற்கரையில்
எப்போதும் நடந்து கொண்டேயிருக்கிறேன்.

எழும்பி விழும்அலை
என் கால்தடத்தை அழித்துவிடும்தான்.

காற்றும் நுரையைக் கொண்டு போய்விடும்தான்.
என்றாலும் கடலும் கரையும்
நித்தியமாக நிலைத்திருக்கும்.

## 2

என் கைகளை ஒருமுறை
மூடுபனி தாங்கி மூடினேன்.
திறந்து பார்த்தேன் பார்!
ஒரு புழுவாகிவிட்டது மூடுபனி.

மறுபடி மூடித் திறந்தேன்.
கண்டேன் ஒரு பறவையை.

மறுபடி மூடித் திறந்தேன்.
உள்ளங்கையின் குழிவில்
ஒரு மனிதன் நின்றிருந்தான்.
அண்ணாந்த துக்கத்தில் அவன் முகம்.

மறுபடி மூடித் திறந்த போதோ
ஏதுமில்லை கைகளில் மூடுபனி மட்டுமே.
என்றாலும் அங்கே திகட்டும் இனிமையில்
ஒரு பாடலைக் கேட்டேன்.

## 3

நேற்றுத்தான் தோன்றியதெனக்கு
சுருதி கலைந்த துகளோ நான்
வாழ்வெனும் கோளத்தில் நடுங்கிக் கொண்டு?

இப்போது தெரிகிறதெனக்கு
நானேதான் அக்கோளம்.

வாழ்வு முழுக்க சிறுசிறு துகள்களாக
இயக்கச் சுருதியில் எனக்குள்.



## 4

துயிலெழுந்த அவர்கள்
என்னிடம் சொன்னார்கள்.

"முடிவில்லாத கடலின்
முடிவில்லாத கரையில்
ஒரு மணல் துகளே
நீயும் நீ வாழும் உலகும்."

என் கனவில் நான்
அவர்களிடம் சொல்கிறேன்.
"நானேதான் அந்த முடிவில்லாத கடல்.
எல்லா உலகங்களும்
எனது கரையின் மணல் துகளே."

## 5

ஒரே ஒரு முறை நான் ஊமையாகிப் போனதுண்டு.

"நீ யார்?"

என்றொருவர் என்னைக் கேட்டபோது.

## 6

இறைவனின் முதல் எண்ணம் ஒரு தேவதையானது.

இறைவனின் முதல் வார்த்தை ஒரு மனிதனானது.

7

கடலருகில் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக
அசைந்து அலைந்து ஏங்கும்
உயிர்கள் நாம்.

வனத்தின் தென்றல்
நமக்கு வார்த்தைகள் தந்தது.

நேற்றைய சப்தங்களில் மட்டுமே
எப்படி நமக்குள் இருக்கும்
ஆண்டாண்டுகளை வெளிப்படுத்துவதாம்?

8

ஸ்பிங்க்ஸ் ஒரே ஒருமுறை பேசியது.

அப்போது ஸ்பிங்க்ஸ் சொன்னது.

"மணலின் ஒரு துகளே பாலைவனம்.

பாலைவனமும் மணலின் ஒரு துகளே.

வா, மறுபடி நாம் மௌனித்துவிடுவோம்."

ஸ்பிங்க்ஸ் சொன்னது கேட்டது,

ஆனால் புரியத்தானில்லை.



9

ஒருமுறை ஒரு பெண்ணின்
முகமொன்று கண்டேன்.

இன்னும் பிறக்காத அவள் குழந்தைகள்
அனைவரையும் அதில் பார்த்தேன்.
பெண்ணொருத்தி என் முகம் கண்டாள்.

அவள் பிறக்குமுன்பே இறந்துவிட்ட
என் முன்னோரைத் தெரிந்து கொண்டாள்.

10

நிறைவேற்றம் பலிதமாகும்தான்.

அறிவார்ந்த உயிர்கள் வசிக்காத கிரகத்தில்
அது எப்படி சாத்தியம்?

இதுவல்லவா ஒவ்வொருவரது இலக்கு!

11

சிப்பியின் வலி
ஒரு மணல் துகளைச் சுற்றிக்
கட்டிய கோயிலே முத்து.

எந்த ஏக்கங்கள் நமது உடலைக் கட்டின?

எந்த மணல் துகளைச் சுற்றி?

12

அற்புதமான இந்த ஏரிக்குள்
கூழாங்கல்லால் என்னைக்
கடவுள் எறிந்தபோது

எண்ணில்லாத வட்டங்களால்
நீர்ப்பரப்பைப் பாதித்தேன்.

ஆனால்
ஆழத்துக்குப் போய்ச் சேர்ந்தபின்
நிச்சலனம்தான்.

13

மௌனத்தைத் தந்துவிடு,

இருட்டுக்குச் சவாலிடுவேன்.

14

என் உடலும்
என் ஆத்மாவும்
காதலித்து மணந்தபோது
எனக்கு
இரண்டாவது ஜனனம்.



15

ஒருவனைப் பார்த்தேன்.
காதுகளில் அதீதக் கூர்மை.
வாயோ ஊமை.
போரில் நாவை இழந்துவிட்டானாம்.

இப்போது தெரிந்துவிட்டதெனக்கு...
மோனத்துக்கு முன்
எத்தனை பெரிய போராட்டங்களென்பது!

அவன் இறந்துவிட்டான் என்பதில்
எனக்கு மகிழ்ச்சியே!
நாங்கள் இருவரும் இணைந்திருக்க
இந்த உலகம் அவ்வளவு பெரியதில்லை.

16

பருவ காலங்கள் தெரியாது
எகிப்தியப் புழுதியில்
அமைதியாக நெடுங்காலம் கிடந்தேன்.

பிறகு...

சூரியன் என்னைப் பிரசவித்தான்.
எழுந்து நைல்நதிக் கரையில் நடந்தேன்.
பகலோடு பாடிக் கொண்டும்
இரவோடு கனவு கண்டும்
நைல்நதிக் கரையில் நடந்தேன்.

இப்போது சூரியன்
தன் ஆயிரம் கால்களைக் கொண்டு
எகிப்திய மண்ணில் கிடக்க
என்னை மிதித்து நடக்கிறான்.

ஆனால் இந்த அற்புதத்தையும் புதிரையும் பார்!

என்னை ஒருங்கு சேர்த்த அந்தச் சூரியனுக்கு
என்னைச் சிதைத்துச் சிதறடிக்க முடியவில்லை.

இன்னமும் தலை நிமிர்ந்து
உறுதியாக நான்
நைல்நதிக் கரையில் நடக்கிறேன்.

17

நினைத்துக் கொள்வதென்பது
ஒரு வகைச் சந்திப்புத்தான்.

18

மறப்பதென்பது
ஒரு வகைச் சுதந்தரம்தான்.

19

கணக்கற்ற நட்சத்திரங்களைக் கொண்டு
நாம் காலத்தைக் கணக்கிடுகிறோம்.



அவையோ தம் சட்டைப் பையில் இருக்கும்
சிறு இயந்திரங்களைக் கொண்டு
காலத்தைக் கணக்கிடுகின்றன.

இப்போது சொல்...

ஒரே இடத்தில் ஒரே சமயத்தில்
நாமெப்படிச் சந்திப்பது?

20

பால்வெளியின் சன்னலிலிருந்து பார்ப்பவனுக்கு
சூரியனுக்கும் பூமிக்கும் இடைப்பட்ட தூரம்
தூரமேயல்ல.

21

கழிந்து போன நித்தியத்திலிருந்து
தற்போதைய நித்தியத்துக்கு
ஓடும் ஒளியாறுதான் மானுடம்.

22

ஆகாயத்தில் இருக்கும் ஆவிகள்
மனிதனின் வலியைக் கண்டு
பொறாமையல்லவா படுகின்றன!

23

திருநகருக்குப் போகும் பாதையில்
யாத்திரிகர் ஒருவரைக் கண்டேன்.
"இதுதான் திருநகருக்கான வழியா?"
என்று கேட்டேன்.

அவர்
"என்னோடு வா.
ஓரிரவும் ஒரு பகலும் தாண்டித்
திருநகர் சேர்வாய்." என்றார்

அவரைத் தொடர்ந்தேன்.
நாள்கள் பல இரவுகள் பல

அவரைத் தொடர்ந்தேன்.
திருநகர் அடைந்தேனில்லை.

என்ன விந்தையென்றால்
வழி தவறி என்னை
அவர் அழைத்துப் போய்விட்டதற்கு
அவருக்கு என் மேல் கோபம்.

24

ஓ இறைவா!
முயல் எனக்கு இரையாகுமுன்
என்னைச் சிங்கத்துக்கு இரையாக்கிவிடு.



25

இரவுப் பாதையிலன்றி யாரும்
விடியலைச் சென்றடைய முடியாது.

26

என் வீடு என்னிடம்
"என்னை விட்டுப் போய்விடாதே.
என்னிடம் தங்கியிருக்கிறது உன் கடந்த காலம்,"
என்றது.

என் பாதையோ என்னிடம்
"வா, உன் வழியே போ.
நான்தான் என் எதிர்காலம்,"
என்றது.

வீட்டுக்கும் பாதைக்குமென இரண்டுக்குமாய்ச்
சொன்னேன்.

"எனக்குக் கடந்த காலமோ எதிர்காலமோ இல்லை.

இங்கே தங்குவதென்றால்
தங்கலில் ஒரு போவதுமிருக்கும்.

அங்கே போவதென்றால்
போவதில் ஒரு தங்கலுமிருக்கும்.

அன்பும் இறப்புமே அனைத்தையும் மாற்றும்."

27

இறகுப் படுக்கையில் இருப்பவர் கனவுகள்
கட்டாந்தரையில் படுப்பவர் கனவுகளைவிடப்
பிரமாதமில்லை எனும்போது

வாழ்வின் நியாயத்தின் மேல்
எப்படி நான் நம்பிக்கை இழப்பது?

28

விநோதம்தான்.

சில இன்பங்களுக்கான ஆசை
என் வலியின் ஒரு பகுதியாயிருப்பது.

29

என் ஆத்மாவை வெறுத்திருக்கிறேன்.
ஏழு முறை.

உயர்வடையப் பணிவாய்
இருந்த போது
முதல் முறை.

முடவர்முன்
நொண்டியபோது
இரண்டாம் முறை.



சி,ரமமானதற்கும் எளிதானதற்கும் இடையே
தேர்வெனும்போது எளியதைத்
தேர்ந்த போது
மூன்றாம் முறை.

தவறு செய்துவிட்டு,
பிறரும்தான் தவறு செய்கிறார்கள் என்று
தேற்றிக் கொண்டபோது
நான்காம் முறை.

பலவீனத்தால் செயற்படாதிருந்துவிட்டு
என் பொறுமையே என் பலம்
என்றபோது
ஐந்தாம் முறை.

முகத்தின் அலங்கோலத்தைத்
தன்னுடைய முகமூடிகளில்
ஒன்றுதான் அது எனத் தெரியாது
வெறுத்த போது
ஆறாம் முறை.

வணங்கி ஒரு பாடல் பாடிவிட்டு
அப்படிப் பாடுவதே நல்லியல்பு எனக்
கொண்டபோது
ஏழாம் முறை.

30

பரம சத்தியத்தை எனக்குத் தெரியாது.

ஆனாலும் என் அறியாமையிலும்
நான் பணிவாயிருக்கிறேன்.

அதில்தானே இருக்கிறது
என் கௌரவமும் வெகுமதியும்!

31

கற்பனைக்கும் சாதனைக்கும்
இடைப்பட்ட வெளியை
ஏக்கத்தால் மட்டுமே
கடக்க முடியும்.

32

அதோ சொர்க்கம்,
அந்தக் கதவுக்குப் பின்னால்,
அடுத்த அறையில்.

நானோ சாவியைத்
தொலைத்துவிட்டேன்.

ஒரு வேளை கைதவறி எங்கோ
வைத்துவிட்டேன் போலும்!



33

நீயோ குருடு.
நானோ செவிட்டுமை.

தடவிப் பார்த்துப் புரிந்து கொள்ளலாம் வா.

34

மனிதனின் சீர்மை அடைவதில் இல்லை.
எதை அடைவது என்ற ஏக்கத்தில்தான்.

35

நம்மில் சிலர் இங்க்கைப் போல.

இன்னும் சிலர் பேப்பரைப் போல.

நம்மில் சிலரின் கருமை இல்லையெனில்
நம்மில் சிலர் ஊமையாக இருந்திருப்போம்.

நம்மில் சிலரின் வெண்மை இல்லையெனில்
நம்மில் சிலர் குருடராக இருந்திருப்போம்.

36

எனக்கு ஒரு காதைத் தா.
உனக்கு நானொரு பாடல் தருகிறேன்.

37

மனம் ஒரு ஸ்பாஞ்சு.

இதயம் ஓர் ஓடை.

என்ன விநோதம்....

நம்மில் பலர் உறிஞ்சத் தேர்ந்தோம்!

ஓட அல்ல.

38

பெயரிடாத வரங்களுக்காக ஏங்கும்போதும்
காரணம் தெரியாமல் துக்கித்திருக்கும்போதும்
வளரும் அனைத்தோடும் நீயும் வளர்கிறாய்.

ஆன்மாவை நோக்கி உயர்கிறாய்.

39

தரிசனப் போதையில் ஒருவர்
தான் தரும் தெளிவற்ற விளக்கத்தையும்
திராட்சை ரசம் என்று கொண்டு
இன்னும் மயங்கியவராகிறார்.



40

நீ
போதைக்கெனத் திராட்சை ரசம் குடிக்கிறாய்.
நானோ
வேறொரு திராட்சை ரசத்தின் போதையைக் குறைக்கக்
குடிக்கிறேன்.

41

எனது கோப்பை காலியெனும்போது
அதன் வெறுமையிடம்
என்னை ஒப்படைக்கிறேன்.

அரைகுறையாய் நிரம்பியிருக்கும்போதோ
அந்த அரைகுறைக்காக வருந்துகிறேன்.

42

தன் எதார்த்தத்தில்
தன்னை உனக்குக் காட்டிக் கொள்வதில்
மற்றவர் இல்லை.

காட்ட முடியாததில்தான் அவர் இருக்கிறார்.

எனவே
அவரைப் புரிந்து கொள்ள
சொல்வதை விடுத்து
அவர் சொல்லாமல் விடுத்ததைக் கவனி.

43

நான் சொன்னதில்
பாதிக்குப் பொருளில்லை.

மறுபாதியாவது உன்னைச் சேரவே
சொன்னது அது.

44

நகைச்சுவை உணர்வென்பது
பேச்சின் நீளஅகலம்
தெரிந்து வைத்திருப்பது.

45

என் பேச்சின்
குறைகளைப் பாராட்டி
என் மௌனத்தின்
உயர்வைக் குறைகூறியபோது
என்னுள் தனிமை பிறப்பெடுத்தது.

46

தன் இதயத்தைப்பாட
ஒரு பாடகன் கிடைக்காத போது
வாழ்க்கை தன் மனதை வெளிப்படுத்த
ஒரு தத்துவ அறிஞனைப் படைக்கிறது.



47

சத்தியம் என்பது
எப்போதும் உணர்ந்திருக்க வேண்டியது.

சில வேளைகளில் சொல்லப்பட வேண்டியது.

48

அகத்துள் இருக்கும் அசலானது
மௌனித்திருக்கிறது.

எதைப் பெற்றுக் கொண்டோமோ
அதுவே சலசலக்கிறது.

49

எனக்குள்ளிருக்கும் வாழ்வின் குரல்
உனக்குள்ளிருக்கும் வாழ்வின் காதை
அடையமுடியவில்லை.

என்றாலும்

தனிமையைத் தவிர்க்க
பேசி இருப்போம் வா!

50

இரண்டு பெண்கள் பேசிக் கொண்டிருக்கும்போது
அவர்கள் சொல்வது
ஒன்றுமேயில்லை.

ஒருத்தி மட்டும் பேசும்போதோ
வாழ்வைப் பற்றிய அனைத்தையும்
காட்டிவிடுகிறாள்.

51

தவளைகள் காளைகளைவிட
உரத்துக் கத்துகின்றனதான்.

ஆனாலும் அவை
வயலில் ஏர் இழுக்க முடியாது.

செக்கைச் சுற்ற முடியாது.

அவற்றின் தோலால்
உனக்குச் செருப்புச் செய்ய முடியாது.

52

ஊமைதான் வாயாடியைக் கண்டு
பொறாமைப்படுவான்.



53

கூதிர்காலம்
"என் நெஞ்சில் உள்ளது வசந்தம்,"
என்றால்
யார்தான் நம்புவார்கள்?"

54

ஒவ்வொரு விதையும் ஓர் ஏக்கமே.

55

உண்மையாகக் கண்களைத் திறந்து நீ பார்த்தால்
ஒவ்வொரு வடிவிலும் உன் வடிவையே பார்ப்பாய்.

உண்மையாகக் காதுகளைத்
திறந்து வைத்து நீ கேட்டால்
ஒவ்வொரு குரலிலும் உன் குரலையே கேட்பாய்.

56

இருவர் இருந்தால்தான்
சத்தியம் தெரியும்.

ஒருவர் சொல்ல,
மற்றவர் புரிந்து கொள்ள.

57

வார்த்தை அலைகள் நம்மீது
காலங்காலமாக மோதிக் கொண்டே இருந்தாலும்
அடி ஆழத்தில் என்னவோ
எப்போதும் அமைதிதான்.

58

சாத்திரங்கள் பலவும் சாளரம் போலத்தான்.

சத்தியத்தை அதன் வழியே பார்க்கிறோம்.

எனினும்
அதுவே நம்மைச்
சாத்தியத்திடமிருந்து
பிரித்து நிற்கிறது.

59

ஒளிந்து விளையாடலாம் வா.

என் நெஞ்சுக்குள் ஒளிந்து கொண்டால்
உன்னைக் கண்டுபிடிப்பது சிரமம் அல்ல.

ஆனால் உன் கூட்டுக்குள்ளேயே நீ
பதுங்கிக் கொண்டால்
பிறர் உன்னைத் தேடுவதே வியர்த்தம்தான்.



60

புன்னகை ஒன்றைக் கொண்டு
ஒருத்தி
தன் முகத்துக்குத்
திரையிட்டுக் கொள்ளலாம்தான்.

61

மகிழ்வான இதயங்களோடு இணைந்து
மகிழ்வான கீதம் இசைக்கும்
சோகமான நெஞ்சம்தான்
எத்தனை உயர்ந்தது!

62

பெண்ணைப் புரிந்து கொள்பவன்
எவனோ

மேதைமையைப் பகுத்துத் தெரிபவன்
எவனோ

மோனத்தின் ரகசியத்தைப் வெளிப்படுத்துகிறவன்
எவனோ

அவனே அழகான கனவுக்குப் பின் துயிலெழுந்து
காலை உணவுக்கு உட்காருகிறவன்.

63

நடப்பவர்கள் எல்லோரோடும்
நடப்பேன்.

ஓரத்தில் சலனமின்றி நின்று
நகரும் ஊர்வலத்தைப்
பார்த்திருக்கத்
தரியேன்.

64

உனக்குச் சேவை செய்பவனுக்குப்
பொன்னிலும் மேலானதற்குக் கடன்படுகிறாய்.

உன் நெஞ்சைக் கொடு
அல்லது அவனுக்குச் சேவை செய்.

65

இல்லை,
நாம்
வீணாக வாழ்ந்துவிடவில்லை.

நம்முடைய எலும்புகளைக் கொண்டு
அவர்கள்
கோபுரங்களைக் கட்டவில்லையா என்ன?



66

குறிப்பிட்டதற்கெனவோ
குறிப்பிட்டோருக்கெனவோ
நாம் இருத்தலாகாது.

கவிஞனின் நெஞ்சமும்
கருந்தேளின் கொடுக்கும்
ஒரே மண்ணிலிருந்துதானே
பெருமிதத்தால் உயர்கின்றன!

67

ஒவ்வோர் அசுரனும்
தன்னைக் கொல்ல
ஓர் அவதாரத்தைப் பிரசவிக்கிறான்.

68

மரங்கள்
வானத்தில்
மண் எழுதிய கவிதைகள்.

அவற்றை
வெட்டி வீழ்த்திக் காகிதமாக்கி
நமது வெறுமைக்குச்
சாசனமாக்குகிறோம்.

69

எழுத வேண்டுமென்கிறாயா?
(ஏன் எழுதவேண்டுமென்பது கடவுளுக்கே வெளிச்சம்)

அறிவு வேண்டும்; கலைத்திறன் வேண்டும்.

மந்திரம் வேண்டும்.

வார்த்தைகளின் இசை பற்றிய அறிவு.

இயல்பாகப் படைக்கக் கலைத்திறன்.

வாசகனை நேசிக்க ஒரு மந்திரம்.

70

நம்முடைய நெஞ்சத்தில்
தம் பேனாவைத் தொட்டு
எழுதுகிறார்கள்.

கேட்டாலோ எல்லாம்
அனுக்கிரகம் என்கிறார்கள்.

71

ஒரு மரம் சுயசரிதை எழுதினால்
ஓர் இனத்தின் சரித்திரம் தவிர
வேறொன்றாய் இருக்காது.



72

கவிதை எழுதும் திறன்.
எழுதாத கவிதையின் பரவசம்.

எது வேண்டுமென்றால்
பரவசம் வேண்டுமென்பேன்.

ஆனால்
நீயும் என் பக்கத்து வீட்டுக்காரர்களும் ஒன்றுதான்.
என் தேர்வுகள் எப்போதும் தவறே என்பதில்.

73

கவிதை கருத்தின் வெளிப்பாடல்ல.

இரத்தம் சொட்டும் ஒரு காயம்.
அல்லது
புன்முறுவலின் இதழ்கள்.

அதிலிருந்து எழும் ஒரு கீதம்.

74

வார்த்தைகளுக்கு வயது வரம்பில்லை.
சொல்லும்போதோ எழுதும்போதோ
அவை காலம் கடந்தவை
எனத் தெரிந்திரு.

75

கவிஞன்
முடியிழந்த ஓர் அரசன்.

சாம்பலாகிப் போன தன் கோட்டையில் அமர்ந்து
அச்சாம்பலில் இருந்தும் ஒரு வடிவம் காணமுயலும்
அரசன் ஒரு கவிஞன்.

76

கவிதையில் ஆனந்தமும் வலியும்
ஆச்சரியமும் நிறையவே உண்டு.

அகராதியின் பரிச்சயத்தில்
ஒரு திறனோடு கூட.

77

நெஞ்சத்துக் கீதங்களின் தாயைப்
பயனில்லாது தேடிக் கொண்டிருக்கிறான் கவிஞன்.

78

ஒரு முறை ஒரு கவிஞனிடம் சொன்னேன்.

"நீ சாகுமுன் உன் அருமை தெரியாது."



அவர் சொன்னார்.
"சரிதான்.
இறப்பே அருமையை எப்போதும்
வெளியில் கொண்டுவருவது.
என் மதிப்பைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்கிறாயா?

என் நாக்கை விட
என் நெஞ்சில் அது அதிகம்.
என் கைகளைவிட
என் ஆசையில் அது அதிகம்."

79

என்னதான் பாலைவனத்தின்
வெறுமையின் மையத்தில் நின்று
அழகைப் பற்றிப் பாடுகிறாயென்றாலும்

கானத்தைக் கேட்க
அங்கும் காதுகள் இருக்கின்றன.

80

நெஞ்சை மயக்கும் ஞானம் கவிதை.
மனதில் பாடும் கவிதை ஞானம்.

நெஞ்சை மயக்கும் அதே நேரம்
மனதில் பாட முடியுமானால்
இறைவனின் நிழலில் வாழ்வது சத்தியம்.

81

உத்வேகம் எப்போதும்
பாடத்தான் செய்யும்.

உத்வேகம் ஒரு போதும்
விளக்கம் தர வராது.

82

குழந்தைகளுக்குத் தாலாட்டுப் பாடுவது
நம்மைத் தூங்க வைத்துக் கொள்ளத்தானோ?

83

மனதுக்குத் தரும் விருந்தின்போது
அங்கங்கு விழும் சாப்பாட்டுச் சிதறல்கள்தான்
நமது வார்த்தைகள்.

84

சிந்திப்பது எப்போதுமே கவிதைக்குத் தடைக்கல்.

85

நமது மோனத்தைப் பாடுகிறவனே அரிய பாடகன்.



86

வாயில் திணித்த உணவோடு
பாடுவது எப்படி?
தங்கம் நிறைத்த கைகளை உயர்த்தி
ஆசீர்வதிப்பதெப்படி?

87

காதலைப் பாடும்போது
நைட்டிங்கேல் ஒரு முள் கொண்டு
இதயத்தைக் கீறுகிறதாம்.
அப்படித்தானே நாம் அனைவரும்!
இல்லாவிட்டால் பாடுவதெப்படி?

88

மெல்லப் புலரும்
வசந்தத்தின் ஆரம்பத்தில்
ஒரு பறவை பாடும்
பாடல்தான் மேதைமை.

89

உயரப் பறக்க எழும் ஆத்மாவுக்கும்
இறக்கைகள் கொள்ள உடல் வேண்டுமே!

90

உன்னையும் என்னையும் விடக்
குறைந்தவனல்லன் பைத்தியக்காரன்.

ஓர் இசைக் கலைஞனாக.

அவன் வாசிக்கும் கருவியில்தான்
கொஞ்சம் அபஸ்வரம்.

91

தாயின் நெஞ்சில் மௌனித்திருக்கும் கீதம்
மகவின் உதட்டில் பாட்டாகிறது.

92

எந்த ஏக்கமும் நிறைவேறாமல் போவதில்லை.

93

என் சுயத்தின்
இன்னொரு பாதி சொல்வதை
எப்போதுமே நான்
முழுக்க ஒப்புக் கொண்டதில்லை.
எனக்கும் அதற்குமிடையேதானே
சத்தியம் கிடக்கிறது!



94

உன் சுயத்தின் மறுபாதிக்கு
உன்மேல் எப்போதும் கழிவிரக்கம்.

ஆனால் அந்த மறுபாதியோ
வருத்தத்தை உண்டு வாழ்கிறது.

எனவே
எல்லாம் சரியாகத்தானிருக்கிறது.

95

ஆத்மாவுக்கும் உடலுக்கும்
சச்சரவு ஏதுமில்லை.

தூங்கிக் கிடக்கும் ஆத்மாவும்
சுருதி கலைந்த உடலுமாக
இருப்பவர்களின் மனதில் தவிர
ஆத்மாவுக்கும் உடலுக்கும்
சச்சரவு ஏதுமில்லை.

96

வாழ்வின் நெஞ்சத்தைச்
சென்று சேரும்போது
அழகுக்குக் குருடாகிப் போன
கண்கள் உட்பட
எதிலும் அழகையே காண்பாய்.

97

வாழ்வதே
அழகைக் கண்டுகொள்ளத்தான்.

பிறவெல்லாம்
காத்திருத்தலின் ஒரு வடிவந்தான்.

98

ஒரு விதையைப் போடு.

மண் உனக்கொரு மலரைத் தரும்.

வானம் நோக்கிய கனவொன்று காண்.

வானம் உனக்கொரு காதலியைத் தரும்.

99

நீ பிறந்த அன்றே
பேய் செத்து ஒழிந்தது.

இனி
நரகத்தின் வழியாகப் போய்த்தான்
ஒரு தேவதையைக் காண வேண்டும்
என்பதில்லை.



100

பெண்கள் பலரும்
ஆண்களின் இதயத்தை
இரவல் வாங்கிக் கொள்கிறார்கள்.

வெகுசிலரே அவற்றைத்
தமதாக்கிக் கொள்கிறார்கள்.

101

உனதாக்கிக் கொள்ள வேண்டுமென்றால்
எனதென்று உரிமை கொண்டாடாதே.

102

ஒருவனின் கை ஒருத்தியைத் தீண்டும்போது
இருவரும் நித்தியத்தின் நெஞ்சைத்
தொட்டுவிடுகிறார்கள்.

103

காதலனுக்கும் காதலிக்கும் இடையே
ஒரு திரைதான்
காதல்.

104

ஒவ்வொருவனும் இரு பெண்களைக் காதலிக்கிறான்.
ஒருத்தி அவன் கற்பனையின் படைப்பு.

இன்னொருத்தியோ இன்னும் பிறக்கவேயில்லை.

105

பெண்களின் சின்னச் சின்னக் குறைகளைப்
பொறுத்துக் கொள்ளாத ஆண்கள்

பெண்களின் பெரிய பெரிய நலன்களை
அனுபவிப்பதில்லை.

106

ஒவ்வொரு நாளும் புதுப்பித்துக் கொள்ளாத காதல்
ஒரு பழக்கமாகிவிடுகிறது.

அப்படியாகி ஓர்
அடிமைத்தனமும் ஆகிவிடுகிறது.

107

காதலர்கள் தமக்கிடையே இருப்பதைத்தான்
அணைத்துக் கொள்கிறார்கள்.
ஒருவரை ஒருவர் அல்ல.



108

காதலுக்கும் சந்தேகத்துக்குமிடையே
எப்போதும் பேச்சு வார்த்தை இருப்பதில்லை.

109

ஓர் ஒளிப் பக்கத்தில்
ஓர் ஒளிக் கை
எழுதியவோர்
ஒளி வார்த்தையே
காதல்.

110

தோழமை எப்போதுமே
ஓர் இனிய கடமை.

ஒரு சந்தர்ப்பமல்ல.

111

எல்லாச் சூழலிலும் உன் நண்பனைப்
புரிந்து கொள்ள முடியாதெனில்
அவனை எப்போதுமே
புரிந்து கொள்ள முடியாது.

112

உன் உடைகளில் மிகப் பிரமாதமானது
மற்றவன் நெய்தது.

உன் உணவில் மிகச் சுவையானது
மற்றவன் வீட்டில் உண்டது.

உன் படுக்கையில் மிகச் சௌகரியமானது
மற்றவன் வீட்டில் இருப்பது.

இப்போது சொல்...
மற்றவனிடமிருந்து உன்னை
எப்படிப் பிரித்துப் பார்ப்பது?

113

உன் மனம் கூட்டலிலும் கழித்தலிலும்.
என் நெஞ்சமோ மூடுபனிக்குள்.

இப்படி இருப்பதை மனமும் நெஞ்சும்
நிறுத்தும் வரைக்கும் நமக்குள் ஒத்துப் போகமுடியாது.

114

மொழியில் மொத்த வார்த்தைகளே
ஏழு என்று குறைக்காத வரையில்
நாம் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளப் போவதில்லை.



115

என் நெஞ்சை உடைக்காமல்
எப்படி அதன் முத்திரையைப்
பிரித்துப் பார்ப்பது?

116

அதீத ஆனந்தமோ
அதீதத் துக்கமோ மட்டுமே
உண்மையை வெளியிடும்.

நீ வெளிப்பட வேண்டுமானால்
நிர்வாணமாக வெயிலில் நடனமிடவேண்டும்.
உன் சிலுவையைச் சுமக்க வேண்டும்.

117

திருப்தியைப் பற்றி நாம் சொல்வதை
இயற்கை மட்டும் கேட்க நேர்ந்தால்
எந்த ஆறும் கடலை நோக்கிப் பாயாது.

எந்தக் குளிர்காலமும் வசந்தமாக மலராது.

சிக்கனத்தைப் பற்றி நாம் சொல்வதை
இயற்கை மட்டும் கேட்க நேர்ந்தால்
நம்மில் எத்தனை பேர்
காற்றைச் சுவாசிக்க முடியும் என்கிறாய்?

118

சூரியனுக்கு முதுகைத் திருப்பும்போது
உன் நிழலை மட்டுமே நீ பார்க்கிறாய்.

119

பகலின் பகலவன் முன்னிலையில்
நீ சுதந்தரமானவன்.

இரவின் நட்சத்திரங்கள் முன்னிலையில்
நீ சுதந்தரமானவன்.

சூரியனோ சந்திரனோ நட்சத்திரமோ
எதுவும் இல்லாத போதும்
நீ சுதந்தரமானவன்.

எதுவெல்லாம் உன்முன் இருக்கிறதோ
அதைக் காணாமல் கண்களை மூடும்போது கூட
நீ சுதந்தரமானவன்.

ஆனால் யாரை நேசிக்கிறாயோ
அவனுக்கு நீ அடிமை
அவனை நீ நேசிப்பதாலேயே.

உன்னை நேசிப்பவனுக்கும் நீ அடிமை
அவன் உன்னை நேசிப்பதாலேயே.



120

நாம் ஒவ்வொருவரும்
கோயில் வாசல் பிச்சைக்காரர்தான்.

அரசன் கோயிலுக்கு உள்ளே போய்
வெளியே வரும்போது
நம் அனைவருக்கும் அவரவர் பங்கு கிடைக்கிறது.
ஆனால் நமக்குள்ளோ பொறாமை.

அது கடவுளை நிந்திக்க இன்னுமொரு வழிதான்.

121

பசிக்கு மீறிச் சாப்பிடமுடியாது.

ரொட்டியின் அடுத்த பாதி
மற்றவனுடையது.

எதேச்சையான விருந்தாளிக்கும்
கொஞ்சம் மிச்சமிருக்க வேண்டும்.

122

விருந்தாளிகள் மட்டும்
இல்லையென்றால்
ஒவ்வொரு வீடும்
ஒரு கல்லறையே.

**123**

கருணையோடு ஓர் ஓநாய்
அப்பாவியான ஓர் ஆட்டிடம் சொன்னது,

"எங்கள் வீட்டுக்கு வந்து
எங்களைக் கௌரவிக்க மாட்டாயா?"

ஆடு பதில் சொன்னது.

"உங்கள் வீடு
உங்கள் வயிற்றுக்குள்
இல்லாமல் இருந்திருந்தால்
வந்து கௌரவித்திருப்போம்தான்."

**124**

விருந்தினரை
வாசற்படியில் நிறுத்திச் சொன்னேன்.

"உள்ளே வரும்போது
காலைத் துடைத்துக் கொள்ளாதீர்கள்.

வெளியே போகும்போது
துடைத்துக் கொள்ளுங்களேன்."





**125**

தாராளம் என்பது
உன்னைவிட எது எனக்கு
அதிகம் தேவையோ
அதைத் தருவதல்ல.

என்னைவிட எது உனக்கு
அதிகம் தேவையோ
அதைத் தருவதுதான்.

**126** 

கொடுக்கும் போது நீ தர்மவான்தான்.

ஆனால் கொடுக்கும்போது
கொஞ்சம் அப்புறம் திரும்பிக் கொள்ளேன்.

வாங்கிக் கொள்பவன் முகத்தில் தெரியும்
கூச்சத்தைப் பார்க்காமல் இருக்க.




**127**

பெரும் பணக்காரனுக்கும்
பெரும் ஏழைக்கும்
வித்தியாசம்
ஒரு நாள் பசியும்
ஒரு மணி நேரத் தாகமும்தான்.

128

நாம் அடிக்கடி
நமது அடுத்த நாள்களிலிருந்து
கடன் வாங்குகிறோம்.

நமது நேற்றைய கடன்களை
அடைக்கத்தான்.

129

என்னிடமும் தேவதைகளும் பேய்களும்
வருவதுண்டு.

ஆனால் அவற்றை நான்
கழித்துக் கட்டிவிடுகிறேன்.

வந்தது ஒரு தேவதையானால்
பழையதொரு பிரார்த்தனையைச் சொல்கிறேன்.

தேவதைக்குச் சலித்துப் போய்விடுகிறது.

வந்தது ஒரு பேயானால்
பழையதொரு பாவத்தைச் செய்கிறேன்.

பேய் என்னைத் தாண்டிப் போய்விடுகிறது.



130

இது ஒன்றும் மோசமான சிறைச்சாலையல்ல.

என்றாலும்
என்னுடைய கொட்டடிக்கும்
அடுத்த கைதியின் கொட்டடிக்கும்
இடைப்பட்ட சுவரை எனக்குப் பிடிப்பதில்லை.

என்றாலும்
உனக்கு ஒன்றைச் சொல்லத்தான் வேண்டும்.
சிறையின் வார்டர் மேல் எனக்குக் கோபம் இல்லை.
சிறையைக் கட்டியவர் மேலும்தான்.

131

மீன் ஒன்றை நீ கேட்கப்
பாம்பு ஒன்றை உனக்குத் தருபவரிடம்
பாம்பைத் தவிர வேறொன்றுமிருந்திருக்காது.

அப்படியானால் அவர்களும் தர்மவான்களே.

132

தந்திரங்கள் அவ்வப்போது ஜெயிக்கின்றன.

என்றாலும்
கடைசியில் அவை
தற்கொலைதான் செய்து கொள்கின்றன.

133

இரத்தம் சிந்தாத கொலைகாரர்களை

திருடாத திருடர்களை

பொய் சொல்லாத பொய்யர்களை

மன்னிக்கும்போதுதான்

நீ

உண்மையிலேயே மன்னிப்பவன்.

134

நல்லதையும் பொல்லாததையும்
பிரிக்கும் கோட்டைத் தொடுபவன்
இறைவனின் அங்கியின் முனையைத்
தொட முடிகிறவன்.

135

நெஞ்சு ஓர் எரிமலை என்றால்
கையில் மலர் விரியவேண்டும் என்று
எப்படி எதிர்பார்க்கலாம்?



136

இது ஒரு விநோதமான சுகம்தான்.

என்னை வஞ்சித்து ஏமாற்றுகிறவர்கள் உண்டு.

அப்போது நான் சிரித்துக் கொள்வதுண்டு.

நான் வஞ்சிக்கப்பட்டதும் ஏமாற்றப்பட்டதும்
எனக்குத் தெரியாது என்று நினைத்திருக்கும்
அவர்கள் செலவில் நான் சிரித்துக் கொள்வதுண்டு.

137

துரத்திக் கொண்டிருப்பவனே
தான் துரத்தப்பட்டிருப்பதாக
நினைத்துக் கொண்டிருப்பது பற்றி
நானென்ன சொல்ல இருக்கிறது?

138

தன் அழுக்குக் கையை
உன் உடையில் துடைத்துக் கொள்கிறவன்
எடுத்துக் கொள்ளட்டும் உன் உடையை,
விட்டுவிடு.

அவனுக்கு மறுபடியும் தேவைப்படும்.

உனக்கோ நிச்சயம் தேவை தீர்ந்துவிடும்.

139

பணத்தை மாற்றிக் கொள்பவர்கள்
நல்ல தோட்டக்காரர்களாக ஆக முடியாதென்பது
இரக்கப்பட வேண்டிய விஷயம்தான்.

140

உன் இயல்பின் கறைகளுக்கு
கற்றுக் கொண்ட நல்லியல்பெனும்
வெள்ளையடித்து மறைத்துவிடாதே.

எனக்கு என் தவறுகள் வேண்டும்தான்
ஏனெனில் அவை என்னுடையவையே அல்லவா!

141

நானிருக்கும் போது மற்றவர்
சகஜமாக இருக்கவேண்டும் அல்லவா.

அதனால்தான் பலமுறையும்
செய்யாத குற்றங்களைச்
செய்துவிட்டதாகச் சொல்லிக் கொள்கிறேன்.

142

வாழ்வின் முகமூடிகள் கூட
ஆழ்ந்த ரகசியத்தின் முகமூடிகளே.



143

உன்னைப் பற்றி உனக்குத் தெரிந்ததை வைத்துக்
கொண்டே
பிறர் மீது தீர்ப்புச் சொல்கிறாய்.

சொல்லப்பா சொல்!
நமக்குள் யார் குற்றவாளி
யார் குற்றவாளி இல்லையென்று
சொல்லிவிடு.

144

சரியான நியாயவான் யாரென்கிறாயா?
உன்னுடைய குற்றத்தில் தானும்
பாதிக் குற்றவாளி என்று உணர்கிறவன்தான்.

145

முட்டாளும் மேதையுமே
மனிதர் இயற்றிய சட்டங்களை மீறுகிறார்கள்.

அவர்களே கடவுளின் நெஞ்சுக்கு அருகர்.

146

துரத்தப்படும் போதுதான் நீ வேகம் கொள்கிறாய்.

147

எனக்கு எதிரிகள் யாருமில்லை.

ஓ கடவுளே!

அப்படி எதிரியாக யாராவது ஒருவர்
இருந்துதானாக வேண்டுமானால்

அவருடைய பலம்
என்னுடையதற்கு இணையாக இருக்கட்டும்.

வாய்மையே வெல்லட்டும் என்பதற்காகத்தான்.

148

இருவரும் இறந்துவிடும்போது

நீயும் உன் எதிரியும்

நண்பர்களாகிப் போவீர்கள்.

149

ஒருவேளை

தன்னைக் காத்துக் கொள்ளவே ஒருவன்

தற்கொலை செய்து கொள்கிறானோ!



150

முன்னொரு நாள் மனிதர் ஒருவரைச்
சிலுவையில் அறைந்துவிட்டார்கள்.

அன்புடையவராய்
பிறர் நேசிப்பவராயும் இருந்துவிட்டதால்தான்.

சொன்னால் விநோதமாயிருக்கும்.
நேற்று அவரை மும்முறை சந்தித்தேன்.

முதல் முறை
ஒரு விலைமாதைச் சிறையில் போட வேண்டாம் என்று
ஒரு போலீஸ் அதிகாரியிடம் சொல்லிக்
கொண்டிருந்தார்.

இரண்டாம் முறை
தள்ளி வைத்திருந்த ஒருவனோடு உட்கார்ந்து
மதுவருந்திக் கொண்டிருந்தார்.

மூன்றாம் முறை
சர்ச் ஒன்றுக்குள்
இறைக் கொள்கை பரப்பும் ஒருவரோடு
குஸ்தியிட்டுக் கொண்டிருந்தார்.

151

அவர்கள் நல்லது கெட்டதைப் பற்றிச்
சொல்வதெல்லாம் உண்மைதான் என்றால்
என்னுடைய வாழ்க்கையே ஒரு நெடும் குற்றம்தான்.

152

இரக்கம் நீதியில் பாதி.

153

எனக்கு அநீதி இழைத்த ஒரே ஒருவர்
நான் அநீதி இழைத்தவரின் சகோதரர்.

154

ஒருவனைச் சிறைக்கு அழைத்துப் போகும்போது
உனக்குள் சொல்லிக்கொள்.

"இதைவிட மோசமான சிறையிலிருந்து
தப்பித்தான் போ."

குடித்துக்கிடக்கும் ஒருவனைக் காணும்போது
உனக்குள் சொல்லிக்கொள்.

"இதைவிட அசிங்கமானதிலிருந்து தப்பிக்கத்தான்
இந்த அசிங்கத்தில் கிடக்கிறானோ!"

155

தற்காப்பு என்னைப் பலமுறையும்
வெறுப்படையத்தான் வைத்திருக்கிறது
ஆனால் நான் கொஞ்சம் பலசாலியாக இருந்திருந்தால்
அந்த ஆயுதத்தை ஏந்தியேயிருக்கமாட்டேன்.



156

கண்களில் தெரியும் வெறுப்பை

உதட்டில் நெளியும் முறுவலால்

இட்டுக்கட்ட நினைப்பவன்

எவ்வளவு பெரிய முட்டாள்!

157

என்னிலும் தாழ்ந்தோரே என் மீது
பொறாமையும் வெறுப்பும் கொள்ள முடியும்.

என்னைப் பார்த்து யாரும் பொறாமைப்பட்டதில்லை.

வெறுத்ததுமில்லை.

யாரைவிடவும் நான் உயர்ந்தோனில்லை.

என்னைவிட உயர்ந்தோரே என்னைப்
பாராட்டவோ கேவலப்படுத்தவோ முடியும்.

என்னை யாரும் பாராட்டியதில்லை.
கேவலப்படுத்தியதில்லை.

யாரைவிடவும் நான் தாழ்ந்தவனில்லை.

"உன்னைப் புரிந்துகொள்ள முடியவில்லை,"
என்கிறாயே

என்நிலைமைக்கு மீறிய புகழ்ச்சி அது.

உனக்கு அநாவசியக் கேவலமும் அதுதான்.

159

வாழ்க்கை எனக்குத் தங்கத்தைத் தந்திருக்க
நான் உனக்கு வெள்ளியைக் கொடுத்துவிட்டு
எவ்வளவு தாராளமானவன் நான் என
நினைக்கிறேனே!

இதைவிடக் கேவலம் வேறொன்றில்லை.

160

வாழ்வின் இதயத்துக்குச் சென்று சேரும்போது
எந்த மாபாதகனை விடவும்
நீ உயர்ந்தவனில்லை என்பது தெரியும்.

எந்த மகானை விடவும்
தாழ்ந்தவனில்லை என்பதும் தெரியும்.



161

மெல்ல நடப்பவனைப் பார்த்துப்
பரிதாபப்படும் நீ
மெல்ல நினைப்பவனைப் பார்த்துப்
பரிதாபப்படுவதில்லையே!

கண்ணில் பார்வையில்லாதவனைப் பார்த்துப்
பரிதாபப்படும் நீ
குருட்டு நெஞ்சத்தவனைப் பார்த்துப்
பரிதாபப்படுவதில்லையே!

விநோதம்தான்.

162

முடவன் தன் எதிரியை அடித்துத்
தன் கைத்தடியை முறிக்காதிருப்பதே
புத்திசாலித்தனம்.

163

தன் சட்டைப் பையிலிருந்து
உனக்கு ஒன்றைக் கொடுத்துவிட்டு
உன் நெஞ்சத்தை எடுத்துக் கொள்ள
நினைக்கிறவன்தான்
எத்தகைய குருடன்!

164

வாழ்க்கை ஓர் ஊர்வலம்.

மெதுவாக நடக்கிறவனுக்கு அதன் வேகம் அதிகம்.

தள்ளி நின்றுவிடுகிறான்.

வேகமாக நடப்பவனுக்கு அதன் வேகம் குறைவு.

அவனும் தள்ளி நின்றுவிடுகிறான்.

165

பாவம் என்ற ஒன்று இருக்குமானால்
நாம் அதை மீளச் செய்கிறோம்—
நமது முன்னோர் வழித் தொடர்ந்து.

நம்மில் சிலரோ
நம் வாரிசுகளுக்கு வாய்ப்பளிக்காமல்
முன்னரே செய்தும் விடுகிறோம்.

166

உண்மையிலேயே நல்லவன் என்பவன்
மோசமானவர்கள் எனப்
பிறர் சொல்பவரோடு
கூடவே இருப்பவன்தான்.



167

நாம் எல்லோருமே கைதிகள்தான்.
சிலர் சன்னலுள்ள கொட்டடியில்.
சிலர் சன்னலில்லாக் கொட்டடியில்.

168

விநோதம்தான்.
நாமனைவருமே நமது தவறுகளை
முனைப்பாக நியாயப்படுத்துகிறோம்.

நம்மில் எவரும் நமது சரிகளை
அதே முனைப்போடு நியாயப்படுத்துவதில்லை.

169

நமது பாவங்களை
நாம் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டோமானால்
ஒருவரையொருவர் பார்த்துச்
சிரிக்கத்தான் செய்வோம்.

பாவங்களில் தனித்துவம் ஏதும் இல்லையே என்று.

நமது நற்குணங்களை
நாம் ஒருவருக்கொருவர்
சொல்லிப் பார்த்துக் கொண்டாலும்
அதே கதைதான்.

170

மனிதன் வகுத்த மரபுகளை எதிர்த்துக்
குற்றம் ஒன்று செய்யாத வரைக்கும்
மனிதன் வகுத்த சட்டத்தைவிட
உயர்ந்தவனாயிருக்கிறான்.

அப்படிச் செய்துவிட்டாலோ
யாரையும் விட அவன் உயர்ந்தவனாவதில்லை
தாழ்ந்தவனுமாவதில்லை.

171

நீயும் நானும்
செய்து கொண்ட ஓர் ஒப்பந்தமே
அரசாங்கம்.

நீயும் நானும் வழக்கமாகத்
தவறு செய்கிறவர்கள்தானே!

172

குற்றம் என்பது
தேவைக்கு வேறொரு பெயர்

அல்லது

ஒரு நோயின் ஒரு குணம்.



173

பிறரது குற்றத்தைப் பற்றிய

உணர்வோடு இருப்பதை விட

பெரிய குற்றம் வேறெதுவும் உண்டோ?

174

மற்றவன் உன்னைப் பார்த்துச் சிரித்தால்
அவன் மீது பரிதாபப்படலாம்.

நீ அவனைப் பார்த்துச் சிரித்தாலோ
உன்னை நீ மன்னிக்கவே முடியாது.

மற்றவன் உன்னைக் காயப்படுத்தினால்
காயத்தை மறந்துவிடலாம்.

நீயே அவனைக் காயப்படுத்தினால்
எப்போதும் நீ அதை மறக்க மாட்டாய்.

உண்மையில்

மற்றவன் என்பவன்
உன் சுயத்தின் உணர்வுக் கூர்மை
எடுத்திருக்கும் இன்னுமோர் உடல்தான்.

175

எவ்வளவு பொறுப்பில்லாதவன் நீ!
உன்னுடைய இறக்கை கொண்டு
பலரும் பறக்க வேண்டியிருக்க
ஒரு சிறகைக் கூடக் கொடுக்க முடியாதபோது!

176

ஒருமுறை ஒருவன்
என் மேசையில் அமர்ந்து
என் ரொட்டியை விழுங்கி
என் திராட்சை ரசத்தைக் குடித்துவிட்டு
போகும்போது என்னைப் பார்த்துச்
சிரித்துவிட்டுப் போனான்.

அவன் ரொட்டியும்
திராட்சை ரசமும் வேண்டி
மறுபடி என்னிடம் வந்தான்.

நானோ அவனை விரட்டியடித்தேன்.

தேவதைகள் என்னைப் பார்த்துச் சிரித்தன.

177

வெறுப்பு ஒரு பிணம்.
யார்தான் ஒரு கல்லறையாக இருப்பது?



178

கொல்லப்பட்டவனின் கௌரவம்
அவன் கொலைகாரனாக இல்லாமல் போனதுதான்.

179

மானுடத்தின் மாநாட்டுப் பிரதிநிதி
மானுடத்தின் அமைதியான நெஞ்சில் இருக்கிறான்.

சலசலக்கும் அதன் மனதில் அல்ல.

180

பணத்துக்கு என் நேரத்தை விற்காதவன்.

அதனாலேயே என்னை முட்டாள் என்கிறார்கள்.

நானோ அவர்களை முட்டாள்களென்கிறேன்.

என் நேரத்துக்கு ஒரு விலையுண்டு என
நினைத்திருப்பதால்.

181

அவர் நம்முன் விரித்து வைத்திருப்பது
சொத்தும் தங்கமும் வெள்ளியும்
தந்தமும் கருங்காலி மரமும்.

நாம் அவர்கள் முன் விரியத் திறந்து வைத்திருப்பது
நம் நெஞ்சையும் ஆத்மாவையும்.
என்றாலும்
நம்மை விருந்தாளிகள் என்றும்
தம்மை விருந்தோம்பிகள் என்றும்
சொல்லிக் கொள்கிறார்களே!

182

மக்களில் கடைசி ஆளாக இருந்தாவது
கனவுகளையும் ஆசைகளையும்
நிறைவேற்ற விரும்புவேனேயன்றி
மக்களின் மிக்கோனாக
கனவுகளும் ஆசைகளும்
இல்லாமல் இருக்கத் துணியேன்.

183

தன் கனவுகளைத்
தங்கமாகவும் வெள்ளியாகவும்
மாற்றுவோனே
மக்களில் கருணை மிக்கோன்.

184

நெஞ்சத்து ஆசையின் முகட்டை நோக்கி
நாமனைவரும் ஏறிக் கொண்டிருப்பவர்களே.



ஏறிக் கொண்டிருக்கும் இன்னொருவன்
உன் மூட்டையையும் பையையும்
திருடிக் கொண்டால் பரிதாபப்படு.

மூட்டையோடும் பையோடும்
பருத்துக் கனத்தால்
உடற்பருமன் ஏறுவதற்குச் சிரமம்.
பைக்கனம் பாதையை நீட்டிக்கும்.

இளைத்து எளிதாய் ஏறும் நீ
மூச்சுவிட்டு அவன் இளைத்தால்
ஒரு கை கொடுத்துதவு.

உன் வேகத்துக்கும் ஓர் உத்வேகம்.

185

யார் மீதும் அவர் பற்றி
உனக்குத் தெரிந்நதைத் தாண்டி
நீ தீர்ப்பளிக்க முடியாது.

ஆனால் நீ அறிந்திருப்பதோ எவ்வளவு கொஞ்சம்!

186

வென்றவன் தோற்றவனுக்குப்
பிரசங்கம் செய்வதைக்
கேட்டுக் கொண்டிருக்க மாட்டேன்.

**187**

கொத்தடிமையின் சுமையைப்
பொறுமையாய்ச் சுமப்பவனே

உண்மையில் சுதந்தரன்.

**188**

ஆயிரம் வருடங்களுக்கு முன்
என் பக்கத்து வீட்டுக்காரர்
என்னிடம் சொன்னார்.

"நான் வாழ்வை வெறுக்கிறேன்.
வலியன்றி அது வேறு ஏதுமில்லை."

நேற்று ஓர் இடுகாடு வழியாய்ப் போனேன்.

அவர் கல்லறை மீது வாழ்வு
நடனமிட்டுக் கொண்டிருக்கக் கண்டேன்.

**189**

நிலைகுலைந்ததன்
நியமத்துக்கான ஏக்கம்தான்
இயற்கையின் போராட்டம்.



**190**

உளுத்துப்போன கிளைகளை
உடைத்துப் போடும்

மௌனப்புயலே தனிமை.

என்றாலும் அது

உயிர்த்திருக்கும் நம் வேர்களை
உயிர்த்திருக்கும் மண்ணுக்குள்
உயிர்த்திருக்கும் நெஞ்சின் ஆழத்துக்கு

அனுப்பத்தான் செய்கிறது.

**191**

ஒருமுறை ஓர் ஓடையிடம்
கடலைப்பற்றிச் சொன்னேன்.

ஓடையோ என்னை மிகைப்படுத்தும்
கற்பனையாளன் என நினைத்தது.

ஒரு முறை கடலிடம் நான்
ஓடையைப் பற்றிச் சொன்னேன்.

கடலோ என்னைக் குறைத்துப் பேசும்
மலினன் எனக் கொண்டது.

192

எறும்பின் சுறுசுறுப்பை
வெட்டுக்கிளியின் பாடலைவிட
உயர்ந்தது என்பது
எவ்வளவு குறுகிய மனப்பாங்கு!

193

இவ்வுலகின் மிகப் பெரிய நலனும்
அவ்வுலகின் மிகச் சாதாரண நலனாகலாம்.

194

உயர்வும் தாழ்வும்
உயரவோ தாழவோ
நேர்கோட்டில் நகர்கின்றன.

எது விரிந்து பரந்து விசாலமாயிருக்கிறதோ
அதுதான் வட்டமிட்டுப் படரும்.

195

நிறையும் பளுவும் பற்றி
நமக்குத் தெரியவில்லையென்றால்
தும்பியையும் சூரியனையும்
ஒரே வியப்போடு பார்த்திருப்போம்.



196

கற்பனை வளமில்லாத
அறிவியல் அறிஞன்

மொண்ணைக் கத்தியும்
தேய்ந்த தராசும் கொண்ட
கறிக்கடைக்காரன்.

என்றாலும் என்ன செய்வது?
நாமெல்லோருமே சாகபட்சிணிகள் இல்லையே.

197

நீ பாடும்போது பசித்திருப்பவன்
தன் வயிற்றால் உன் பாடலைக் கேட்கிறான்.

198

வயதாகித் தளர்ந்தவனுக்கும்
இறப்புக்கும் உள்ள தூரம்
பிறந்த சிசுவுக்கும்
இறப்புக்கும் இடையே இருப்பதைவிடவும்
அதிகம் இல்லைதான்.

அப்படியேதான்
வாழ்வுக்கும் அவர்களுக்கும்
இடைப்பட்ட தூரமும்.

199

உண்மையில் வெகுளியாயிருக்க வேண்டுமா?

அழகாக வெகுளியாக இரு.

இல்லையா, மௌனித்திரு.

ஏனென்கிறாயா?
பக்கத்து வீட்டில் ஒருவன்
செத்துக் கொண்டிருக்கிறான்.

200

மனிதர்கள் கலந்து கொள்ளும்
சவ ஊர்வலம்
தேவதைகளுக்கு ஒரு
திருமண விருந்தாயிருக்கலாம்.

201

மறந்துபோன ஓர் எதார்த்தம்
இறக்கும்போது
தன் உயிலில்
ஏழாயிரம் எதார்த்தங்களையும் நிஜங்களையும்
தன் சவஊர்வலத்துக்கெனவும்
கல்லறைக்கெனவும்
எழுதி வைத்திருக்கலாம்



202

பேசும்போதெல்லாம் நாம்
நமக்காகவே பேசிக் கொள்கிறோம்.
என்றாலும் சமயங்களில்
பிறர் கேட்குமளவுக்கு
உரத்துப் பேசிவிடுகிறோம்.

203

தெளிவாகத் தெரிவது எதுவா?
யாரோ ஒருவர் அதை மிக எளிதாகச்
சொல்லிக் காட்டும்வரை
தெரியாதிருப்பது.

204

பால்வெளி எனக்குள்ளே இல்லையென்றால்
அதை எப்படி நான் பார்த்திருக்க முடியுமென்கிறாய்?
எப்படித் தெரிந்து வைத்திருக்க முடியுமென்கிறாய்?

205

மருத்துவர்களிடையே நான்
மருத்துவனாக இல்லாமல் இருந்தால்
அவர்கள் எப்படி என்னை வானவியலாளன்
என்று எடுத்துக் கொள்வார்களென்கிறாய்?

206

சிப்பிக்குக் கடல் தந்த விளக்கம் முத்தோ!
கரிக்குக் காலம் தந்த விளக்கம் வைரமோ!

207

ஒளியில் நிற்கும் உணர்வின் நிழல் புகழ்.

208

புகழை விரும்பாத மலர்தான் வேர்.

209

அழகை விஞ்சும் மதமில்லை.
அறிவியலுமில்லை.

210

எனக்குத் தெரிந்த ஒவ்வொரு பெரிய மனிதருக்கும்
சில்லறைச் சில்மிஷங்கள் இருந்தன.

இந்தச் சில்லறைச் சமாசாரங்கள்தான்
செயலிழப்பையும் பேதலிப்பையும்
தற்கொலையையும் தடுத்து நிறுத்தின.



211

உண்மையில் உயர்ந்தோன்
யாருக்கும் ஆண்டையில்லை.

ஆண்டை யாரும் அவருக்குமில்லை.

212

குற்றவாளிகளையும் தீர்க்க தரிசிகளையும்
கொல்கிறான் என்பதாலேயே
மனிதன் மிகச் சாதாரணமானவன்
என நான் நம்பவில்லை.

213

தனக்குத் திமிர் வேண்டும்
என்ற காதல் நோயே சகிப்பு.

214

புழுக்கள் நெளியும்தான்.

ஆனால் யானை கூட
அவற்றுக்கு வழிவிட வேண்டும் என்பது
விநோதமல்லவா?

215

இரண்டு மனங்களுக்கிடையே
மிகக் குறுகிய பாதை
கருத்து வேறுபாடுதானோ!

216

நானே தீக்கொழுந்து.

நானே காய்ந்த புதரும்.

என் ஒரு பகுதி
மறுபகுதியை விழுங்குகிறது.

217

நாம் எல்லோருமே
திருமலையின் உச்சியைத்
தேடிப் போகிறவர்கள்தான்.

கடந்த காலத்தை
ஒரு வழிகாட்டியாகவன்றி
ஒரு வரைபடமாகக் கொண்டால்

தூரம் குறைந்துவிடுமல்லவா?



218

கண்ணீர் விட முடியாத பெருமிதமும்
சிரிக்க முடியாத அளவு இறுக்கமும்
தன்னைத் தவிர வேறொன்றை நாடாத தன்முனைப்பும்
கொள்ளும்போது

ஞானம் ஞானமாயிருப்பதை நிறுத்திவிடுகிறது.

219

நீ அறிந்ததையெல்லாம் கொண்டு
என்னை நான் நிரப்பிக் கொண்டால்

நீ அறியாததைக் கொள்ள
இடமில்லாது போய்விடுமோ?

220

வாயாடியிடமிருந்து மௌனத்தையும்
சகிக்காதவனிடமிருந்து சகிப்பையும்
இரக்கமற்றவனிடமிருந்து இரக்கத்தையும்
கற்றுக் கொண்டேன்.

எனினும் இது விநோதம்—

அந்த ஆசிரியர்களுக்கு நான்
நன்றி பாராட்டுவதில்லை.

221

குருட்டுப் பிடிவாதமுடையவன்

டமாரச் செவிடான பிரசங்கி.

222

பொறாமை கொண்டவர்களின் மௌனம்

ஆரவாரம் மிக்கது.

223

தெரிந்து கொள்ள வேண்டியதன்
முடிவை அடையும்போது

உணர வேண்டியதன்
ஆரம்பத்தை அடைகிறாய்.

224

மிகைப்படுத்தப்பட்டது

ஜீவனை இழந்த ஓர் உண்மையாகிறது.



225

வெளிச்சம் காட்டுவதை மட்டுமே பார்க்கிறாயா?
சப்தம் அறிவிப்பதை மட்டுமே கேட்கிறாயா?

அப்படித் தானென்றால்

வாஸ்தவத்தில் நீ பார்ப்பது ஏதுமில்லை.
கேட்பதும் ஏதுமில்லை.

226

நிஜம் அலியாகிப் போன சத்தியம்.

227

ஒரே சமயத்தில்
முறுவலோடும் கருணையின்றியும்
இருப்பது
முடியாத காரியம்.

228

எனக்கு மிக நெருக்கமானவர்
நாடில்லாத அரசனும்
பிச்சையெடுக்கத் தெரியாத
ஏழையும்தான்.

229

வெட்கப்படும் தோல்வி
வெட்கங்கெட்ட வெற்றியை விட
உயர்ந்தது.

230

பூமியில்
எங்கே தோண்டிப் பார்த்தாலும்
ஒரு புதையல் கிடைக்கும்.

வேண்டியதெல்லாம்
ஒரு விவசாயியின் நம்பிக்கையே.

231

வேட்டையாடப்பட்ட ஒரு நரியை
இருபது குதிரை வீரர்களும்
இருபது வேட்டை நாய்களும் துரத்த,
அது நினைத்துக் கொண்டது.

"என்னைக் கொன்றுவிடுவார்கள்தான்.
ஆனாலும் எவ்வளவு முட்டாள்கள்!
ஒரு மனிதனைக் கொல்ல
இருபது நரிகள் இருபது கழுதைகள் மீதேறி வர
இருபது ஓநாய்கள் தொடர்வது என்ன வியர்த்தம்?"



232

நாம் வகுத்த சட்டங்களுக்கு
விட்டுக் கொடுத்து அடிபணிவது
நமது மனம்தான்.

நமது ஆத்மாவோ
எப்போதும் அடிபணிவதில்லை.

233

ஒவ்வொரு நாளும்
என் ஆத்மாவின்
புதியதொரு பிரதேசத்தைக்
கண்டுபிடிக்கும் நான்,

ஒரு யாத்திரிகன். ஒரு மாலுமி.

234

ஒரு பெண் மறுத்துப் பேசினாள்.

"அது நியாயமான போர்தான்.
என் மகன் அதில் இறந்திருக்கிறானே!"

**235**

வாழ்விடம் நான் சொன்னேன்.

"இறப்பின் வார்த்தைகளைக் கேட்கிறேனே!"

வாழ்வு குரலெடுத்துச் சொன்னது.

"இப்போது கேட்டுக் கொண்டுதானே இருக்கிறாய்!"

**236**

வாழ்வின் புதிர்கள் அனைத்தையும்
விடுவித்தானபின்
இறப்பை நோக்கி ஏங்குகிறாய்.

ஏனெனில்
இறப்பு வாழ்வின் இன்னொரு புதிர்.

**237**

பிறப்பும் இறப்பும் இரண்டும்

தைரியத்தின்

மிக உயர்ந்த வெளிப்பாடுகள்.



**238**

நீ பேசும்போது உன்னுடைய குரல்
என்னுடைய குரலே என்று
நான் கேட்டிருக்கும் வரைக்கும்

உனக்கு முன் நிற்கும்போது
ஒரு கண்ணாடிக்கு முன் நின்றிருப்பதாக
நான் கொள்ளும் வரைக்கும்,

நண்பனே!

காலம் முழுக்க நீயும் நானும்

நமக்கிடையேயும் நமக்குள்ளேயும்

நமக்கும் நமது வாழ்வுக்கும் கூடப்

பரிச்சயம் இல்லாதவர்களாகத்தான் இருப்போம்.

**239**

அவர்கள் சொன்னார்கள்
"நீ உன்னைத் தெரிந்து வைத்திருந்தால்
அனைவரையும் தெரிந்து வைத்திருக்கிறாய்."

நான் சொன்னேன்.

"அனைவரையும் தேடிப் போகும்போதுதான்
என்னை நான் தெரிந்து கொள்ள முடியும்."

240

மனிதன் இரட்டைப் பிறவி.

ஒருவன்
இருட்டில் விழித்திருக்கிறான்.

இன்னொருவன்
வெளிச்சத்தில் தூங்குகிறான்.

241

உலகை இடையீடின்றி
முழுக்க அனுபவிக்க
அதன் துண்டுத் துணுக்குகளை
முழுக்கத் துறந்துவிடுபவரே
துறவி.

242

அறிஞருக்கும் கவிஞருக்கும் இடையே
செழுமையானதொரு வயலிருக்கிறது.

அறிஞர் அதைக் கடக்கும் போது
விவேகியாகிவிடுகிறார்.

கவிஞர் அதைக் கடக்கும் போது
தீர்க்கதரிசியாகிவிடுகிறார்.



243

நேற்று மாலை கடைவீதியில்
தத்துவ அறிஞர்களைப் பார்த்தேன்.

கூடைகளில் தம் தலைகளை வைத்து,
"ஞானம், ஞானம்!" என்று விற்கக் கூவினார்கள்.

பாவம் அவர்கள்!
நெஞ்சத்துக்கு உணவளிக்கத் தலைகளை விற்கிறார்கள்.

244

சத்தியத்தைக் காது கொடுத்துக் கேட்பவன்

சத்தியத்தைச் சொல்பவனை விடக்
குறைந்தவன் அல்லன்.

245

ஒரு தத்துவ ஞானி, வீதி கூட்டும் ஒருவனிடம்
"ஐயோ பாவம்! உன்னுடைய வேலையில்
சிரமம், அசுத்தம்." என்றார்.

அவன்,
"நன்றி ஐயா! உங்கள் வேலை என்னவோ?"
என்றான்.

தத்துவ ஞானியும்
"நான் மனிதர்களின் மனத்தைப் படிக்கிறேன்.
அவன் காரியங்களை, அவன் ஆசைகளை."
என்றார்.

பிறகு அந்த வீதி கூட்டுபவன் சொன்னான்,
புன்னகை நிறைந்த முகத்தோடும்
செய்யும் தொழிலை விடாமலும்,
"ஐயோ பாவம் நீங்களும்தான்!

246

தேவைக்கும் ஆடம்பரத்துக்கும்
வித்தியாசம் காண்பது
யாருக்கும் முடியாது.

தேவதைகள்தான் காண முடியும்.

தேவதைகளுக்கு
விவேகமும் ஆர்வமும் உண்டு.
நமது சிறந்த எண்ணங்களே
தேவதைகளாயினவோ!

247

கடுந்துறவியின் நெஞ்சத்தில்
தன் சிம்மாசனத்தைக் காண்பவனே
உண்மையான இளவரசன்.



248

உன்னால் முடிந்ததைவிட
அதிகம் தருவது தாராளம்.

உனக்குத் தேவையானதை விடக்
குறைவாக எடுத்துக் கொள்வது பெருமை.

249

வாஸ்தவத்தில் நீ
யாருக்கும் எதற்கும்
கடன்பட்டவனில்லை.

ஆனால்
எல்லாவற்றுக்கும் எல்லோருக்கும்
கடன்பட்டவன்தான்.

250

கடந்த காலத்தில் வாழ்ந்தவர் அனைவரும்
இப்போதும் நம்முடன் வாழ்கிறார்கள்.

நிச்சயமாக நாம் அனைவரும்
நயமாக விருந்தோம்புவோம்தான்.

**251**

அதீதமான ஏக்கம் உள்ளவரே
அதிக காலம் வாழ்கிறார்.

**252**

இரண்டு மூலகங்களே இங்கே உண்டு.

அழகும் சத்தியமும்.

காதலர்கள் நெஞ்சத்து அன்பு.
உழுபவர் கைச் சத்தியம்.

**253**

அவர்கள் சொல்கிறார்கள்.

"கையில் இருக்கும் ஒரு பறவை
புதரில் இருக்கும் பத்தைவிட மேல்."

நான் சொல்கிறேன்.

"புதரில் இருக்கும் ஒரு பறவையும்
ஒரு சிறகும் கூட
கையிலிருக்கும் பத்துப் பறவைகளைவிட மேல்."
அந்தச் சிறகைத் தேடும் உன் நாட்டமே
இறக்கை முளைத்த கால்களான வாழ்வு.

ஒ. இல்லை, வாழ்வே அதுதான்.



**254**

அதீத அழகு
என்னைச் சிறைப்படுத்துகிறது.

அதை விஞ்சும் அழகோ
அதிலிருந்தும் என்னை விடுவிக்கிறது.

**255**

அழகுக்காக ஏங்குகிறவன் நெஞ்சில்

அழகைக் காண்பவனின் கண்களில் இருப்பதைவிடவும்

பிரகாசமாக அழகு ஜொலிக்கிறது.

**256**

தன் மனதைத் திறந்து காட்டுகிறவனைக்
கொண்டாடுகிறேன்.

தன் கனவைத் திரைநீக்கிக் காட்டுகிறவனைக்
கௌரவிக்கிறேன்.

ஆனால் அது ஏன்
எனக்குச் சேவை செய்கிறவர் முன்
நான் நாணுவது? கொஞ்சம் வெட்கமும் படுவது?

257

மேதைகள் ஒரு காலம்
அரசனின் சேவையில் பெருமை கொண்டார்கள்.

இப்போதோ
திவாலாகிப் போனவர்களுக்குச்
சேவை செய்வதுதான் கௌரவம் என்கிறார்கள்.

258

காரியவாதிகள் பலரும் கனவு காண்பவரின்
நெற்றி வியர்வையில் தோய்த்துத்தான்

தமது ரொட்டியைத் தின்கிறார்கள் என்பது
தேவதைகளுக்குத் தெரியும்.

259

நக்கலான பேச்சு
வழக்கமாக ஒரு முகமூடி.

கொஞ்சம் கிழித்துப் பார்த்தால் தெரியும்
பின்னால் இருப்பது

எரிச்சலடைந்த ஒரு மேதை
அல்லது
தந்திரத்தின் சதிராட்டம் என்பது.



260

புரிதல் என்னைப் புரிந்தவன் என்கிறது.

மடமை என்னை மடையன் என்கிறது.

இரண்டுமே சரிதான் எனத்தான் நினைக்கிறேன்.

261

நெஞ்சத்தில் ரகசியங்களை வைத்திருப்போரே
பிறர் நெஞ்சத்து ரகசியங்களின்
ஆழம் காண முடிந்தோர்.

262

உன் மகிழ்வில் பங்கு கொண்டு
உன் வலியில் பங்கெடுக்காதவன்
சொர்க்கத்தின் ஏழு சாவிகளில்
ஒன்றைத் தொலைத்துவிட்டவன்.

263

ஆமாம், நிர்வாணம் நிஜம்தான்.

உன் ஆடுகளைப் புல்வெளிக்கு
இட்டுச் செல்வதில் இருக்கிறது.

உன் குழந்தையைத்
தூங்க வைப்பதில் இருக்கிறது.

உன் கவிதையின் கடைசி வரியை
எழுதுவதில் இருக்கிறது.

264

நாம் அனுபவிப்பதற்கு
வெகு காலத்துக்கு முன்பே
நமது இன்பங்களையும் துன்பங்களையும்
நாம் தேர்ந்தெடுத்துவிட்டோம்.

265

இரண்டு பூங்காக்களுக்கு
இடைப்பட்ட மதில்தான்
சோகம்.

266

உன்னுடைய ஆனந்தமோ துக்கமோ
மிகப் பிரமாண்டமானதாகும் போது

இந்த உலகம்
அற்பமானதாகி விடுகிறது.



267

ஆசை வாழ்வில் பாதி. அலட்சியம் இறப்பில் பாதி.

268

இன்றைய துக்கத்தின் மிகக் கசப்பான பகுதி
நேற்றைய இன்பத்தின் ஞாபகம்தான்.

269

அவர்கள் சொல்கிறார்கள்.
"இந்த உலகத்து இன்பங்களா?
அந்த உலகத்து நிம்மதியா?
தேர்ந்துவிடு."

நான் சொல்கிறேன்.

"இந்த உலகத்து ஆனந்தத்தையும்
அந்த உலகத்து நிம்மதியையும்
ஒன்றாகத் தேர்ந்தெடுத்துவிட்டேன்."

எப்படியா?
உன்னதக் கவிஞன்
ஒரே ஒரு கவிதையை எழுதியிருக்கிறான் என்பதும்
அது படிப்பதற்குப் பிரமாதம் என்பதும்
அதில் சந்தம்சிறப்பு என்பதும்
எனக்குத் தெரியும்.

அதனால்தான்.

270

சிந்தனையெனும் பாலைவனப் பயணக்குழு
எப்போதும் சென்று சேரமுடியாத
இதயத்துப் பாலைவனச் சோலையே
நம்பிக்கை.

271

உயர்வின் உச்சிக்குப் போய்ச் சேர்ந்தபின்
ஆசைக்கான ஆசையே இருக்கும்.

பசிக்கான பசியே இருக்கும்.

அதிக தாகத்துக்கான தாகமே இருக்கும்.

272

காற்றிடம் உன் ரகசியங்களைச் சொல்லியான பின்
மரங்களுக்குச் சொல்லிவிட்டதே
என்று குற்றம் சாட்டக் கூடாது.

273

வசந்தத்தின் மலர்கள்
தேவதைகளின் சாப்பாட்டு மேசையில்
காலை உணவாகும்
குளிர்காலத்தின் கனவுகள்.



274

ஓர் எலி ஒரு ரோஜாவைப் பார்த்துச் சொன்னது:
"பார் எவ்வளவு வேகமாக நான் ஓடுகிறேன்.
நீ நடக்க முடியாது. ஊர்வது கூட முடியாது."

ரோஜா எலியைப் பார்த்துச் சொன்னது:
"மேன்மையான ஓடுகாலியே
தயவு செய்து வேகமாக ஓடிப்போ."

275

ஆமைகளுக்கு முயல்களை விடச்
சாலைகள் பற்றி அதிகம் தெரியும்

276

விநோதம்தான்!
முதுகெலும்பில்லாத ஜந்துக்களுக்கு
பலமான ஓடுகள்.

277

மிக அதிகம் பேசுகிறவனுக்கு
மிகக் குறைவு அறிவு.

பிரசங்கிக்கும் ஏலக்காரனுக்கும்
ஏது வித்தியாசம்?

278

தந்தையின் புகழையோ மாமனின் செல்வத்தையோ
வாழ்ந்து கழிக்க வேண்டியதில்லை
என்பதற்கு நன்றி சொல்.

அதைவிட அதிகம் நன்றி சொல்ல வேண்டும்.
உன் புகழையோ செல்வத்தையோ
யாரும் வாழ்ந்து கழிக்க வேண்டியதில்லை என்பதற்கு.

279

வித்தைக்காரன்
வீசிய பந்தைப் பிடிக்கத் தவறும்போதுதான்
என் கவனத்தைக் கவர்கிறான்.

280

பொறாமைக்காரன்
தனக்குத் தெரியாமலேயே
என்னைப் புகழ்கிறான்.

281

நெடுங்காலம் நீ என் தாயின்
உறக்கத்தில் கனமாயிருந்தாய்.

பிறகே அவள் தூக்கம் கலைந்து
உன்னைப் பெற்றெடுத்தாள்.



282

இந்த இனத்தின் கரு
உன் தாயின் ஏக்கத்தில் இருக்கிறது.

283

என் தந்தையும் தாயும் ஒரு மகவை வேண்டி
என்னைப் பெற்றனர்.

நானோ
ஒரு தந்தையும் தாயும் வேண்டி
இருட்டையும் கடலையும் பெற்றேன்.

284

நம் குழந்தைகளில் சிலர்
நம்மை நியாயப்படுத்துகிறார்கள்.

மற்றும் சிலரோ
நமது வருத்தங்களாகிறார்கள்.

285

இரவு விழுந்தபின்
நீயும் இருட்டாகிப் போனபின்
ஒரு வைராக்கியத்தோடு இருட்டாயிரு.

விடியல் வந்தும் நீ இருட்டாக இருந்தால்
வைராக்கியத்தோடு எழுந்து நின்று

பகலிடம் சொல்:
"நான் இன்னும் இருட்டாகவே இருக்கிறேன்."
இருட்டுக்கு இருட்டாக பகலுக்குப் பகலாகப்
பாசாங்கு செய்வது முட்டாள்தனம்.
இரண்டுமே உன்னைப் பார்த்துச்
சிரிக்கத்தான் செய்யும்.

286

மூடுபனி கவிழ்ந்த மலை கரட்டு மேடாகிவிடாது.
ஒக் மரம் மழையால் அழும் வில்லோவாகிவிடாது.

287

இதோ ஒரு முரண் உண்மை.

ஆழமும் உயரமும் இரண்டுக்கும் நடுவே இருப்பது
அவை தத்தமக்கு அருகே இருப்பதைவிட
அருகில்தான் இருக்கின்றன.

288

உனக்கெதிரில் ஒரு தெளிவான கண்ணாடியாக
நான் நின்றபோது
எனக்குள் பார்த்து உன்னைக் கண்டுகொண்டாய்.
பிறகு, "உன்னைக் காதலிக்கிறேன்," என்றாய்.
வாஸ்தவத்தில் எனக்குள் இருக்கும் உன்னையே
நீ காதலித்தாய்.



289

அருகிருப்பவனை நேசிப்பதைச்
சுகமென அனுபவிக்கும் போது
அது நல்லியல்பு இல்லாமல் போகிறது.

290

ஊற்றெனப் பொங்காத காதல்
எப்போதும் இறந்து கொண்டே இருக்கிறது.

291

இளமையையும்
அத்தோடு இருக்கும் அறிவையும்
ஒன்றாகப் பெற்றுக் கொள்ள முடியாது.

ஏனெனில், இளமை
தெரிந்து கொள்வதில் முனைப்பாக இருக்கிறது.
அறிவோ, உயிர்த்திருப்பதில் முனைப்பாக இருக்கிறது.

292

சன்னலருகில் உட்கார்ந்து
போவோர் வருவோரைப் பார்த்திருக்கலாம்.

வலப்பக்கமாக ஒரு கன்யாஸ்திரீ போக
இடப்பக்கமாக ஒரு விலைமாது போகலாம்.

அறியாமையில்
"எவ்வளவு மேன்மையானவர் அவர்!
எவ்வளவு கீழ்மகள் இவள்!"
எனலாம்.

ஆனால் கண்களை ஒரு கணம் மூடிக்
கவனித்துக் கேட்டால்
காற்றில் கிசுகிசுக்கும் ஒரு குரல் கேட்பாய்.

"ஒருத்தி என்னை பிரார்த்தனையில் தேடுகிறாள்.

இன்னொருத்தி என்னை வலியில் தேடுகிறாள்.

இருவருடைய ஆத்மப் பூங்காவிலும்
என் ஆவிக்கென ஒரு கொடிப் பந்தல்
இருக்கிறதுதான்."

293

ஒவ்வொரு நூறு வருடங்களுக்கும் ஒருமுறை
நாசரேத்தின் ஏசு, கிறிஸ்துவனின் ஏசுவை
லெபனானின் மலைப் பூங்காவொன்றில் சந்திக்கிறார்.

நெடு நேரம் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

ஒவ்வொரு முறையும் விடை பெறும்போது
நாசரேத்தின் ஏசு, கிறிஸ்துவனின் ஏசுவிடம்
"நண்பா! நாம் இருவரும் எப்போதும்
ஒத்துப் போகப் போவதில்லை."
என்றுதான் சொல்கிறார்.



294

நிறைந்து வழிவோருக்குக் கடவுள் ஊட்டிவிடுவாராக.

295

பெரிய மனிதனுக்கு இரண்டு நெஞ்சங்கள்.
ஒன்றில் இரத்தம் கசிகிறது.
இன்னொன்று பொறுத்துக் கொள்கிறது.

296

உன்னையோ யாரையோ
புண்படுத்தாத பொய்யை ஒருவர் சொல்லும்போது
உனக்குள்
"அவன் வீடு அவன் கற்பனைகளைக்
கொள்ளுமளவுக்குப் பெரியதில்லை பாவம்!
இன்னும் கொஞ்சம் பெரிய இடத்துக்கு
அவற்றைக் கொண்டு வந்திருக்கிறான்."
என்று சொல்லிக் கொள்ளேன்.

297

மூடிய ஒவ்வொரு கதவுக்குப் பின்னாலும்
முத்திரை எழிட்ட ரகசியம்
ஒன்று இருக்கிறது.

298

காத்திருத்தல் காலத்தின் காலடிகள்.

299

உன் வீட்டின் கிழக்குச் சுவரில்
சிரமம்
புதியதொரு சன்னலாக இருக்குமானால்
என்ன செய்ய?

300

யாரோடு சிரித்திருந்தாயோ அவரை மறந்துவிடலாம்.
ஆனால்
யாரோடு அழுதிருந்தாயோ அவரை மறக்க முடியாது.

301

உப்பில் ஏதோ விநோதமான புனிதம் இருக்கவேண்டும்.
நமது கண்ணீரிலும் கடல்நீரிலும் இருக்கிறதே.

302

கடவுள் தன் கருணையான தாகத்துக்கு
நம் எல்லோரையும் குடித்துவிடுவார்.

பனித்துளியும் கண்ணீர்த்துளியுமாக.



303

உன் பிரமாண்ட ஆத்மாவின்
ஒரு சிறு பகுதிதான் நீ.

ரொட்டியைத் தேடும் வாய்.

தாகத்தில் தவிக்கும் வாய்க்கு
கோப்பையைக் கொண்டு போகும் குருட்டுக் கை.

304

இனம், நாடு, தான் என்பதைத் தாண்டி
ஓர் அங்குலம் உயர்ந்தாலும்
நீ கடவுளைப் போலாகிவிடுவாய்.

305

நான் நீயாக இருந்தால்
கடல் காற்று பலமில்லையே என்று வருந்தமாட்டேன்.

நல்ல கப்பல்தான். நல்ல கேப்டனும்தான்.
உனக்குத்தான் கலங்கிப் போன வயிறு.

306

எதற்காக ஏங்கியும் அடையமுடியாமல் போயிற்றோ
அதைவிட
நாம் ஏற்கெனவே அடைந்து விட்டது
மலிவானதுதான்.

307

ஒரு மேகத்தின் மேல் உட்கார்ந்து பார்த்தால்
நாடுகளுக்கிடையே எல்லைகள் தெரியாது.

தோட்டங்களுக்கிடையே முட்டுக்கற்கள் தெரியாது.

பாவம், உனக்குத்தான் மேகத்தின் மேல்
உட்கார முடியாதிருக்கிறது.

308

ஏழு நூற்றாண்டுகளுக்கு முன்
ஏழு வெண்புறாக்கள்
ஆழ்ந்த பள்ளத்தாக்கிலிருந்து எழுந்து
உயர்ந்த பனி மூடிய சிகரத்தை நோக்கிப் பறந்தனவாம்.

அதைப் பார்த்திருந்த ஏழு பேரில் ஒருவர்
ஏழாவது புறாவின் இறக்கையில்
கறுப்புப் பொட்டொன்று தெரிகிறது என்றாராம்.

அந்தப் பள்ளத்தாக்கில் இன்றிருப்போர்
பனி மூடிய சிகரத்தை நோக்கிப் பறந்த
ஏழு கறுப்புப் புறாக்களைப் பற்றிப்
பேசித் திரிகிறார்கள்.



309

இலையுதிர்காலத்தில் என் சோகங்கள்
அனைத்தையும் திரட்டித் தோட்டத்தில் புதைத்தேன்.

ஏப்ரல் வரவும்
வசந்தம் நிலத்தை மணந்து கொள்ளவும்
என்னுடைய தோட்டத்தில் எங்குமில்லாத அழகோடு
மலர்கள் மலர்ந்தன.

அதைப் பார்த்த பக்கத்து வீட்டுக்காரர்கள்
என்னிடம்

"மறுபடி இலையுதிர்காலம் வரும்போது
எங்களுக்கும் இந்த விதைகளைத் தருவாயா,
எங்கள் தோட்டத்திலும்
அழகான மலர்கள் மலரத் தோதுவாய்?"
என்றார்கள்.

310

நான் வெறுங்கையை நீட்ட
யாரும் எதுவும்
தராது போவது மோசம்தான்.

அதைவிட மோசம்
நிறைந்த கைகளை நீட்டியிருக்க
யாரும் பெற்றுக் கொள்ள வராதது.

311

நித்தியத்தை நோக்கி ஏங்குகிறேன்.
எழுதாத என் கவிதைகளை அங்கே பார்க்கலாமே.
வரையாத என் ஓவியங்களை அங்கே பார்க்கலாமே.

312

இயற்கையிலிருந்து எல்லையற்றதை நோக்கி
எடுத்து வைத்த ஓர் அடிதான் கலை.

313

மூடுபனியைச் செதுக்கிய வடிவம்தான்
கலைப்படைப்பு.

314

முட்கிரீடம் செய்யும் கைகள் கூடச்
சும்மாயிருக்கும் கைகளைவிட மேல்.

315

நமது மிகப் புனிதமான கண்ணீர்த் துளிகள்
நம் கண்களைத் தேடுவதில்லை.

316

ஒவ்வோர் மனிதனும்
ஒவ்வொரு அரசனுடையவும் அடிமையுடையவும்
வாரிசுதான்.



317

ஏசுவின் முப்பாட்டனுக்குத்
தனக்குள் என்ன ஒளிந்திருக்கிறது
என்று தெரிந்திருந்தால்
தன்னைப் பார்த்தே வியந்து போயிருக்க மாட்டாரா?

318

யூதாஸின் தாயன்பு
மேரியின் தாயன்புக்கு இளைத்ததா என்ன?

319

சகோதரர் ஏசுவைப் பற்றிய
மூன்று அதிசயங்கள்
எழுதப்படவில்லை.

முதலாவது
அவர் உன்னையும் என்னையும் போல
ஒரு மனிதர்.

இரண்டாவது
அவருக்கு நகைச்சுவை உணர்விருந்தது.

மூன்றாவது
வெல்லப்பட்டிருந்தபோதும் தாமே வெல்பவர் என்பது
அவருக்குத் தெரிந்திருந்தது.

**320**

சிலுவையில் மரித்தவரே!
என் நெஞ்சில் சிலுவையில் அறையப்பட்டீர்.
உங்கள் கைகளைத் துளைத்த ஆணிகள்
என் நெஞ்சின் சுவர்களையும் துளைத்தன.
நாளைக்கு இந்த கோல்கொத்தா வழியாகப்
போகும் ஒருவனுக்கு
இங்கே இருவர் இரத்தம் சிந்தியது
தெரியப்போவதில்லை.
ஒருவரின் இரத்தம்தான் என்று எடுத்துக் கொள்வான்.

**321** 

திருமலை பற்றிக் கேள்விப்பட்டிருப்பாய்.
அதுதான் நமது உலகில் உயர்ந்த மலை.

அந்த உச்சிக்கு நீ போய்ச் சேர்ந்தால்
உனக்கு ஒரே ஓர் ஆசைதானிருக்கும்.

அங்கிருந்து கீழிறங்கிப் பள்ளத்தாக்கில்
இருப்போரோடு இருக்கும் ஆசை.

அதனால்தான் அந்தத் திருமலை என்கிறார்கள்.



**322**

என்னுடைய வார்த்தைகளில் சிறைப்படுத்தி வைத்த
ஒவ்வோர் எண்ணத்தையும்
என் செயல்கள் மூலம் விடுவிக்க வேண்டும்.